# திருக்காளத்தி இட்டகாமிய மாலை

## காப்பு

**நேரிசை வெண்பா**

தேமிகுகா ளத்திச் சிவக்கொழுந்தைப் போற்றுமிட்ட
காமிய மாலைக் கலித்துறைக்கு-நேமிபுகழ்
தாளத் தடைவுகொள்பா தாளக் கணபதிதாள்
மேளத் துடன்றுணையா மே.

## நூல்

**கட்டளைக் கலித்துறை**

திருமான் மலரயன் றேடுமெம் மானன்பர் தேக்கவின்பம்
தருமா நடம்புரி பெம்மான் கயிலைத் தலத்தன்றக்கன்
மருமான்வில் வேடர்தங் கோமா னிடுங்கண் வலையிற்சிக்கும்
பெருமா னிடத்திற் சிறுமானொ ரானையைப் பெற்றதுவே. [1]

தமரக் கடலைக் கடைந்த முகுந்தன் றனக்குமெய்க்கே
பமரக்கண் ணாயிரத் தாற்குமெட் டாது பனிக்கதிர்வேற்
குமரக் கடம்பன்முன் னத்தியை யீன்ற கொடியையுங்கொண்
டமரர்க் கரசொரு கல்லா லடியி லமர்ந்ததுவே. [2]

தருமந் தவஞ்சற் றறியாத வேடுவன் றன்செருப்பு
மருமுந்து வேணிக் கணிமா மலரவன் வாயுதகத்
திருமஞ் சனக்குடம் பல்லா லவன்மென்று தின்றதசை
அருமந்த போனக மன்றோநங் காளத்தி யப்பருக்கே. [3]

ஆகாச மாநட்ட மாடீ பரிந்துமை யாளுறைந்த
பாகா செகத்திற் பிறவாம லுக்குன் பதந்தருவாய்
வாகா தவரு மரற்றமால் யானை வதைத்ததன்றோல்
ஏகாச மிட்ட சொருபாதென் காளத்தி யீச்சுரனே. [4]

மச்சிட்ட வீடு சுடலைபன் மாலை மலரவன்கம்
நச்சிட்ட மாகிய கற்பம்வெம் பேய்படை நன்றுதின்ற
உச்சிட்டம் போனக மென்பா பரண முடைபுலித்தோல்
அச்சிட்டர் போற்றுங் கயிலையிற் காளத்தி யப்பருக்கே. [5]

அணியேன்வெண் ணீறு துதியேனின் னாமமெய் யன்பினுன்றாள்
பணியேனின் றொண்ட ருடனணு கேன்பெரும் பாவஞ்செய்த
திணியேன் றவமிலி யானாலுங் காத்தரு டெய்வசிகா
மணியே சிவக்கொழுந் தேகயி லாய மலைக்கொழுந்தே. [6]

போதுசெய் வேன்மனம் புன்மைசெய் வேனம்பிப் போந்தவர்க்குச்
சூதுசெய் வேனுந்தி தான்வளர்க் கைக்குத் தொடங்கிப்பல
தீதுசெய் வேனென் பெரும்பாவந் தானின்று தீருகைக்கிங்
கேதுசெய் வேனிறை வாதிருக் காளத்தி யீச்சுரனே. [7]

அங்கணத் தாரெழுந் தற்புதத் தாமரை யாதரிப்போர்
வங்கணத் தாலெனை யஞ்சலென் பாய்மத னைச்செயித்த
செங்கணத் தாரத்ன மிட்டிமை யாநிற்குஞ் சித்ரபணிக்
கங்கணத் தாய்பொன் முகரிக்கல் லாலடிக் காளத்தியே. [8]

பெருக்க மலக்குடி லைப்பேணி யேயுழல் பித்தனென்கை
சுருக்க மனம்பொறுத் தானாலு மென்மிடி தூளெழப்பார்
மருக்கம லத்துறை வேதற்கெட் டாத வடிவினனே
எருக்க மலர்ச்சடை யாய்திருக் காளத்தி யீச்சுரனே. [9]

பெண்ணப்பன் வேள்வி தனிலே யுகந்து பெருகப்பிடித்
துண்ணப் புகுந்த சுரரையெல் லாந்துரந் தோடச்செய்தாய்
விண்ணப்ப மொன்றுண்டு கேளடி யேன்மெய்ப் பிணிகளைவாய்
கண்ணப்ப னெச்சி லுகந்தவ னேதிருக் காளத்தியே. [10]

துறைவாரி நஞ்சண்ட கோளத்தை முட்டத் தொடங்கியநாள்
நிறைவா னவர்களுந் தாமிற வாமன்முன் னின்றதுபோற்
பிறைவார் சடைமுடிப் பிஞ்ஞக னேயென் பிணிதொலைப்பாய்
இறைவா வுனைநம்பி னேன்றிருக் காளத்தி யீச்சுரனே. [11]

பாலிலுவண்டான சுடைமட்கி நஞ்சம் பரந்ததுபோல்
வாலிப ரூபஞ்சிங் காரத்தின் றீமை மயக்கிடவென்
மேலினில் வந்திடும் பொல்லாப் பிணிதனின் மீட்டருள்வாய்
சேலுகள் வாவி செறிகயி லாயச் சிவக்கொழுந்தே. [12]

நெருப்புக் குகையைப் புழுமொய்க்கு மோவிந்த நீணிலமேல்
இருப்புக் கபாடத்தைச் செல்லெய்து மோவிமை யோர்க்கரசே
விருப்புற்றுன் றாளைத் தியானித்த பேர்க்கு மிடிவருமோ
செருப்புச் சடையண்ண லேகயி லாயச் சிவக்கொழுந்தே. [13]

நொச்சியுங் கொன்றையுஞ் சூழ்சடை யாயென்னை நோவுசெய்யும்
மெய்ச்சிலு கான பிணிதொலைப் பாயன்று வேடனிட்ட
எச்சிலுந் தின்று பசியுங் கெடாம லிருந்தென்மனக்
குச்சி லுறைபவ னேகயி லாயச் சிவக்கொழுந்தே. [14]

சிந்தை வியாகுலந் தந்தடி யேன்மெய்யிற் றீங்குசெய்யும்
இந்த வியாதி தனைக்களை வாயியற் சுந்தரனா
கந்தவி யாமற் பரவைக்குத் தூதுசெல் காரணனே
தந்த வியாளப் பணியாய்கை லாயச் சதாசிவனே. [15]

எலிதான் கலக்கண்ணி னீர்களிற் பூனை யிரங்குமதோ
கிலிதான் பிடித்து மனமே தியங்கிப்பற் கெஞ்சியிட்டால்
வலிதாய பாவம் விடுமோதென் காளத்தி வானவனம்
புலிதாழ் சடையன் கடாட்சமுண் டாயிடிற் போய்விடுமே. [16]

மேலடி வைக்குஞ் சினமாறன் றன்சுர மீட்டகதை
போலடி யேன்மெய்ப் பிணிகளை வாயண்டர் போற்றநெடு
மாலடி தேட வயன்முடி தேட மறைந்தொருகல்
லாலடி தேடி யமர்தரு காளத்தி யாண்டவனே. [17]

கோழைச் சவலை யடியேனைக் காத்தருள் குற்றமிலா
மாழைச் சயிலத் தனுவுடை யாயுன்னை வாழ்த்தப்பொறா
மோழைச் சமணைக் கழுவேற் றினாற்கு முலைகொடுத்த
ஏழைச்சி பங்கின னேதிருக் காளத்தி யீச்சுரனே. [18]

நாவுக் குருசி தனைத்தேடிப் பல்லுயிர் நாடியந்த
ஆவுக்குத் தீங்குசெய் யும்பஞ்ச பாதக னாமென்றனைக்
கோவித்துக் கீழ்நர கிற்படுத் தாமற் குறித்தருள்வாய்
காவித் தடவயல் சூழ்கயி லாபுரிக் காளத்தியே. [19]

மாரக் கடம்பனைப் பெற்றகண் ணாவுனை வாழ்த்துமென்மேற்
கோரப் பிணிகெடப் பார்த்தருள் வாய்நின்சொற் குற்றமென்ற
கீரற்கு நின்சொரு பங்காட்ட வேண்டிக்கிளைத்தெழுந்த
ஈரச் சடாமுடி யாய்திருக் காளத்தி யீச்சுரனே. [20]

நின்பணி தன்னின் முயலேனின் னாம நினைந்தருள்வார்
முன்பணி யேன்றிரு நீறணி யேன்வஞ்ச மூர்க்கனியான்
மின்பணி தொண்டர் தலைமண்டை கொண்டது மீட்டதுபோல்
என்பிணி யைக்களை வாய்திருக் காளத்தி யீச்சுரனே. [21]

வீணுந் தகைமையு மேம்பாடுங் கற்று மிகவுழன்று
சாணுந்தி பேணித் திரிதனன் றோசெஞ் சடாமுடியும்
பூணுமுந் நூலுந் திருமார்புந் தூக்கிய பொற்பதமும்
காணும் பதந்தரு வாய்கயி லாபுரிக் காளத்தியே. [22]

தூற்று மருந்தும்பொய் சோலை மருந்தும்பொய் சூழ்கடலில்
ஏற்று மருந்தும்பொய் மானிடர் காளஞ் செழுத்தையன்பாற்
சாற்று மருந்தவ மில்லாத வன்மெய் தனிற்பிணியை
மாற்று மருந்துதென் கைலாய மேய மலைமருந்தே. [23]

பணிக்கு மருந்து கருட னலாதில்லை பாரிலிருள்
அணிக்கு மருந்து தவனன லாதில்லை யானபசி
தணிக்கு மருந்தன்ன தானமல் லாதில்லை சாற்றுகிலென்
பிணிக்கு மருந்து கயிலாய ரன்றிப் பிறரில்லையே. [24]

நெஞ்சடை யாமுன் னினைவழி யாமுன் னெடும்புலன்கள்
அஞ்சடை யாமுன் னறிவழி யாமு னயர்ந்துகண்கள்
பஞ்சடை யாமுன் னடியேனைக் காத்துன் பதந்தருவாய்
செஞ்சடை யாய்பர மாகயி லாயச் சிவக்கொழுந்தே. [25]

தீக்கிரை யாயெறும் புக்கிரை யாய்மண் டினற்கிரையாய்
நாய்க்கிரை யாய்வன் னரிக்கிரை யாயுட னான்சுமந்தேன்
வாய்க்கிரை தேடி வருந்தாம லாண்மன் மதனையுங்கட்
டீக்கிரை யாக்கிய தேவே கயிலைச் சிவக்கொழுந்தே. [26]

குச்சித்த னன்னெறி யில்லாத வன்வெய்ய கோபனின்பால்
மெய்ச்சித்த மற்றவ னானாலுங் காத்தருள் வேதப்பிரான்
உச்சித் தலைகொய் தவனேகண் ணப்ப னுமிழ்ந்ததசை
இச்சித் தமுதுசெய் தோனேதென் காளத்தி யீச்சுரனே. [27]

நேர்ந்தாரை வாழ்வித்து நேராரைத் தாழ்விக்கு நின்மலனே
பூந்தாரை யிந்து முடித்தவ னேயுனைப் போற்றிவந்து
சேர்ந்தேனை வாழ்வித்தென் மெய்யிற் பிணிதனைத் தீர்த்தருள்வாய்
சார்ந்தாரைக் காப்பவ னேகயி லாபுரிச் சங்கரனே. [28]

அப்புரத் தத்தசை யென்பாற் சமைத்தவென் னாகத்துற்ற
துப்புரத் தைக்குலைக் கும்பிணி தீர்த்தருள் சோபனனீ
செப்புரத் திற்பெண் ணழுத்துங் கணையுஞ் சிலையுங்கொண்டு
முப்புரத் தைச்செற்ற காளத்தி யீச முழுமுதலே. [29]

நாகரை யாகத்திற் பூண்டவ னேயந்த நாட்புரத்தைச்
சேகரை யாடலிற் செற்றவ னேமலர்த் தேமுதலாம்
மாகரை யாளும் பரனேயென் மெய்ப்பிணி மாற்றிவலி
யேகரை யாமல்வைப் பாய்திருக் காளத்தி யீச்சுரனே. [30]

கூற்ற நமனை யுதைத்தவ னேவெங் கொடியபுலித்
தோற்றங் கரையுள்ள சோதியென் னோவைத் தொலைத்தருள்வாய்
போற்று நரையுகந் தாள்பவ னேதெய்வப் பொன்முகரி
யாற்றங் கரையி லமர்ந்தருள் காளத்தி யற்புதனே. [31]

32, 33, 34வது பாடல்கள் கிடைக்கப்பெறவில்லை.

வெங்களை மூடி முளைதனில் வாடுமென் மெய்ப்பிணிநீத்
தங்களைந் தேயெனை யாண்டருள் வாய்கொன்றைத் தாரினை
யும்திங்க ளையுமர வங்களை யுந்திருத் தார்களையும்
கங்களை யுங்கட்டு செஞ்சடை யாய்திருக் காளத்தியே. [35]

பல்லாலொர் மாத்தசை மென்றிட்ட வற்குன் பதமளித்தாய்
வில்லா லசுரரைச் செற்றா யெனது மிடிதொலைப்பாய்
சொல்லா லமரர் துதிக்குங் கயிலைச் சுடர்க்கொழுந்தே
கல்லான் மரத்தி னிழலுறை வாய்திருக் காளத்தியே. [36]

பெரும்புனல் கொன்றை சிறுபிறை சூடிய பிஞ்ஞகனே
இரும்பனைப் பித்தளை யாகாமற் காத்தரு ளேமனென்னும்
துரும்பனைத் தூணி லவதரித் தேசெற்ற சோதிபெற்ற
கரும்பனை வெம்பொடி செய்தவ னேதிருக் காளத்தியே. [37]

அருமந்த வாலிப மெல்லா நடுங்கவென் னாகந்தன்னில்
வருமந்த மான பிணிதொலைப் பாய்நச்சு வாயரவம்
தருமந்த மாணிக்கந் தன்னைக்கை யாலள்ளித் தன்கதிராற்
கருமந்தி செம்மந்தி யாகுங் கயிலையிற் காளத்தியே. [38]

நேமியன் றன்னைக் கலையாக்கி யிந்தை நிலத்தரைத்துத்
தோமிய றக்கன் றலைவெட்டிப் பாரதி துண்டங்கொய்து
மாமிதன் காதை யரிந்தவ னேயென் மனத்துக்கிட்ட
காமியந் தந்தருள் வாய்கயி லாபுரிக் காளத்தியே. [39]

காமத் தளவின் முயல்பஞ்சு பாதகன் கள்வன்செயும்
தோமத் தனையு மிடியத் தனையுந் தொலைத்தருள்வாய்
சேமத்தைச் சேர்சடைப் பாகீ ரதிபொங்கிச் சிந்தச்சிந்த
ஈமத் திருநடஞ் செய்பவ னேயேழிற் காளத்தியே. [40]

குலைமதி யென்றுளம் பேணேன் விரகக் கொடுமையிற்பட்
டலைமதி கேட னெனினு மடியனை யாண்டருள்வாய்
விலைமதி யாத கழையீன்ற முத்தம் வெயிலைத்தள்ளிக்
கலைமதி காட்டுங் கயிலாய மாமலைக் காளத்தியே. [41]

புழைக்கை மலைவெங் கராவாயிற் பட்டுப் புராதனவென்
றழைக்கும் பொழுதரி காத்தது போலெனை யஞ்சலென்பாய்
உழைக்கண் பிதுங்கப் புலிதண்டை மோத வுறவினர்போல்
கழைக்கண்கள் முத்துதிர்க் குங்கயி லாபுரிக் காளத்தியே. [42]

பண்ணிடந் தான்செவி யாகிடப் பாணர்ப் பரித்தவனே
பெண்ணிடந் தான்வைத்த பிஞ்ஞக னேயென் பிணிதொலைப்பாய்
மண்ணிடந் தானயன் காணாத நின்றன் வடிவையெல்லாம்
கண்ணிடந் தானுக் கிருப்பாக நல்கிய காளத்தியே. [43]

அல்விளக் குந்திங்க ளங்கமுந் தேயச்செல் லாதவதனார்
பல்விழக் கண்டவ னேயெனை யாண்டருள் பைந்தொடியார்
இல்விளக் கப்புது மாலைக்கு நாகங்க ளீன்றுவைத்த
கல்விளக் கேற்றுங் கயிலாய மாமலைக் காளத்தியே. [44]

சிலம்பார்க்கத் தூது நடந்தவ னேயென்றன் சிந்தைவியா
குலம்பாற்றி மெய்யிற் பிணிகளை வாய்பெருங் கோலவெண்ணித்
திலம்பார்த் தெடுத்தரி பற்காட்டுங் கொள்கை சிறுபடிமக்
கலம்பார்ப்ப தொக்குங் கயிலாய மாமலைக் காளத்தியே. [45]

செல்வைத்த புற்றிற் பணிவந்த தென்னமெய் தேம்பச்சொட்டைச்
சொல்வைத் துறையும் பிணிதொலைப் பாய்புனஞ் சூழ்கிளியை
வில்வைத்த நன்னுதல் வேடிச் சியர்கவண் மீதுரத்னக்
கல்வைத்து வீசுங் கயிலாய மாமலைக் காளத்தியே. [46]

நண்டா னதுகட்டும் வானரம் போல நடுங்கியுள்ளம்
திண்டாட வந்தெனைச் சாதிக்கு மெய்ப்பிணி தீர்த்தருள்வாய்
அண்டாத மாலயன் றான்முத லான வமரர்குழாம்
கண்டா தரிக்குங் கயிலாய மாமலைக் காளத்தியே. [47]

மிடிக்கே யலுத்து மெலிகின்ற பாதகன் மீண்டுமிந்தக்
கடிக்கே யிளைத்துமெய் நோவாமற் காமின் கனத்தனத்தார்
மடிக்கே கிடத்த வுழல்கின்ற மாயன் வணங்கக்கல்லால்
அடிக்கே யுறைந்த பரனேதென் காளத்தி யற்புதனே. [48]

நிரைப்பண் ணளியிசை மேவிய பூங்குழ னேரிழைமா
தரைப்பின் றொடர்ந்து துயர்படு வேனெனைத் தாங்கியருள்
திரைப்பெண்ணைத் தாங்கு சடையாய் திருவுந்திப் பொன்முகரிக்
கரைப்புண்ணி யாபர மாகயி லாபுரிக் காளத்தியே. [49]